## நின்றருள்வீர் உள்ளில் நிறைந்து!

தேனூறுந் தமிழகஞ்சேர் திருக் கீழக்கரையினிலே
வாஞரும் புகழாய் வதிபவரே - தீஞேரின்
ஆன்றலரே மாப்பிள்ளை ஆலிமெனும் மாதவரே
நின்றருள்வீர் உள்ளில் நிறைந்து.

கவிஞர், S. M. B. மஹ்மூது ஹுஸைன்
(காயல் பிறைக்கொடியான்)

---

அல்லாமா இமாமுல் அரூஸ்

# மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்களின்

## வரலாற்றுச் சுருக்கம்.

''மாப்பிள்ளை லெப்பை ஆலிம்'' எனும் சிறப்புப் பெயர்கொண்டு
அழைக்கப்படுகின்ற அல்லாமா ஸெய்யித் முஹம்மத் ஆலிம்
ஸாஹிபு (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 1232-ம் ஆண்டு காயல்பட்டணத்
தில் பிறந்தார்கள். இவர்களின் தந்தையார் ''அஹ்மதுல் அப்யழ''
எனும் வெள்ளை அஹமது லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்களா
வர். தாயார் காயல்பட்டணம் மேலப்பள்ளிவாசல் என்ற இடத்தில்
அடங்கியுள்ள ''சுவர்க்கத்துப் பெண்'' என்று துலங்கி வரும்
ஆயிஷா என்ற இறை நேசச் செல்வி அவர்களின் மைந்தரின் மகள்
ஆமினு உம்மா (ரலி) அவர்களாவர்.

அல்லாமா அவர்களின் தாய்வழியும், தந்தை வழியும் மாதி
ஹுபர் ....டில் இமாம் ஸதக்கத்துல்லாஹ் அப்பா அவர்களின் சந்த
தயிலேயே சேர்கிறது. மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் பத்து
வயதிற்குள் திருகுர்ஆனை மனனம் செய்து விட்டார்கள். இவர்களது
சிறு பிராயத்திலேயே பெற்ரேர்களுடன் தங்களது பாட்டனுராகிய
அஷ்ஷெய்கு ஸதக்கதுல்லாஹ் அப்பா அவர்கள் அடங்கப் பெற்ற
கீர்த்தி மிகு கீழக்கரைக்குச் சென்று குடியேறி விட்டார்கள். தங்க
ளது தந்தையாகிய ஹழரத் வெள்ளை அஹ்மது லெப்பை ஆலிம்
வலி (ரஹ்) அவர்களிடத்தில் அரபிக்கல்விகள் கற்றுக் கொண்டிருக்
கும்போதே, காயல்பட்டணம் அல்ஹாபிழ் முஹம்மது லெப்பை
ஆலிம் அவர்களின் குமாரரும், அஷ்ஷெய்கு ஸதக்கதுல்லாஹ் வலி
மகள் பிள்ளை பேரனின் மகனும், இப்போது அரூஸிய்யா பள்ளி
என்று சொல்லப்படும் காட்டு தைக்காவில் அடங்கியுள்ள அஷ்
ஷெய்கு அப்துல் காதிர் தைக்கா லெப்பை வலியுல்லாஹ் அவர்க
ளின் தந்தையும் ''ரஜுானதுல் இல்மு'' என்ற பைத்து கிரந்தத்தை
கோர்வை செய்தவருமான அவ்வூர் மகுதூம் பள்ளிவாசல் மக்பருவில்
அடங்கியுள்ள ஹழரத் ஷெய்குனு லெப்பை வலியுல்லாஹ் அவர்க
ளின் மகளின்மைந்தருமான கீழக்கரையையே தங்களதுசொந்த இட
மாக அமைத்துக்கொண்ட, ஞானக்கடலாகிய அஸ்ஸெய்யித்அப்துல்
காதிர் (கீழக்கரை தைக்கா ஸாஹிபு) வலியுல்லாஹ் அவர்களின்
மாணவராக இருந்து தங்களது கல்வியை நிறைவு செய்தார்கள்.

திரு குர்ஆன் விரிவுரைகள், ஹதீஸ்கள், தஸவ்வுஃப் எனும் மெஞ்ஞான கலைத்தத்துவம், இஸ்லாமிய வரலாறுகள் ஆகிய வற்றை கற்றுத்தெளிந்தார்கள். இமாம் அவர்கள் கல்வியறிவில் நிறைந்த சமுத்திரம். தங்கள் காலத்திலேயே சகல உலமா பெரு மக்களுக்கு மத்தியிலே தனிச் சிறப்புடன் விளங்கியதோடு 'குத்புஸ்ஸமான்' மலிக்குஷ்ஷு அரு; மாதிஹுர்ஸ்ஸிப்தைன் போன்ற பட்டங்களும் பெற்றார்கள். இம்மஹானிடம் கல்வியறிவு பெற்றவர்களும், ஞானோபதேசம் பெற்றவர்களும் ஏராளம். தங்க ளது ''ஷெய்கு'' ஷதக்கா ஸாஹிபு வலியுல்லாஹ் அவர்களின் மகளாரையே திருமணம் செய்துக்கொண்டதுடன், அவர்களாலேயே ஆலிமுல் அரூஸ், ''மாப்பிள்ளை ஆலிம்'' என்ற காரணப்பெயரும் பெற்றார்கள்.

அரபுமொழி தெரியாத முஸ்லிம்கள் என்றென்றும் தங்களது மார்க்கத்தை எளிதாகத் தெரிந்து நடக்கவேண்டும் என்ற கருத்தில் இஸ்லாமிய தத்துவங்கள், சட்டங்கள், இவைகளைப்பற்றி அனேக நூல்களை அறபுத் தமிழில் எழுதினார்கள். அறபுத்தமிழில் சட்ட நூல் கள் மட்டுமின்றி, அரபுமொழியிலே கஸீதாக்கள், மவ்லிதுகள், அரபியும் தமிழும் கலந்த இலக்கியங்கள், தமிழ் பாடல்களும் பல இயற்றியுள்ளார்கள். பெருமானார் (ஸல்) அவர்களின் திருப்புதல் வியார் அன்னை ஃபாத்திமா (ரழி) மீதில் தலை ஃபாதிஹா மற்றும் ஜலாலிய்யா ரூதிபு போன்றவைகளும் இவர்களால் இயற்றியவை களேயாகும். இன்னும் அன்னாரின் முயற்சியால் இந்தியா, இலங்கை நாடுகளில் பல பகுதியில் அனேகமான பள்ளிவாசல்கள், மத்ரஸாக் கள், ரூதிபு மஜ்லிசுகள் ஏற்படுத்தப்பட்டு, இன்றுவரை திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

இமாம் அவர்களுக்கு அல்லாஹுத்தஆலா எல்லாச் செல்வங் களையும் கொடுத்தருளினான். அவர்களுக்கு அல்லாஹ் இரு ஆண் மக்களையும் அளித்தான். ஒன்று கல்வத்துக்கும் ஒன்று செல்வத்துக்கும் என்று இமாம் அவர்கள் சொன்னார்கள். அவர் களின் கூற்றுப்படியே மூத்த மகனார் ஸெய்யித் அப்துல்காதிர் என் பார் இர்ஃபானுடைய' இல்மில்' கரைகடந்தவர்களாகி கல்வத்து நாயகம் என்று புகழ் பெற்றார்கள். இளையமகனார் ஷாஹுல்ஹமீத் என்ற அஹ்மது முஸ்தபா அவர்கள் கல்வியிலும் தேர்ச்சிப்பெற்று,



மார்க்க நெறிகளைக் கடைப்பிடித்து செயலாற்றியதோடல்லாமல், பெரும் வணிகராக இருந்து, கொடை வள்ளலாகவும், மக்களுக்கு மார்க்க நெறிகளை போதிப்பவர்களாகவுமிருந்து, செல்வமுடனேயே வாழ்ந்து ஜல்வத் நாயகம் என்ற சிறப்புப் பெயர் பெற்றார்கள். இவர்களின் சந்ததியினர் எல்லாரும் இன்றும் பெரும் வணிகச் செல் வர்களாகவும், கொடை வள்ளலாகவும் திகழ்கின்றனர்.

## ஹத்யாமாலை தொடுத்தல்.

அல்லாமா அவர்களின் அன்பு மனைவியார் ஒரு தினம் தங்க ளுக்கு காசுமாலை ஒன்று வேண்டும் என்று கேட்டபோது, அவ்வாறே தருவதாகச் சொல்லி அந்நிகளஞ்சியமாம் 32 பாடல்களைக்கொண்ட நல்லுபதேசத்தின் பொக்கிஷமான நூல் ஒன்றை கோர்வையாக்கி, தங்களது மனைவியாரிடம் கொடுத்து ''இப்போது உனக்கு ஒரு மாலை சமைத்துக் கொண்டு வந்திருக்கிறேன் இது மற்றவர்கள் அணிந்திருக்கும் அணிகலன்களைப் போல் உடலுக்கு மட்டுமல்ல உள்ளத்திற்கும் அழகைக் கொடுக்கும்; இதில் ஒவ்வொரு காசிலும் 4 இரத்தினங்கள் பதித்த 10 பொற்காசுகள் இருக்கிறதைக் கண்டு மகிழ்வாய், இதோ ஹத்யா வாக இம்மாலையைப் பெற்றுக் கொள்'' என்று கூறி பெருமிதத்தோடு கையில் கொடுத்தார்கள்.

அம்மாது சிரோண்மணி அதை மன மகிழ்ச்சியோடு பெற்று கொண்டு, தாம் விரும்பியபடியே விலை மதிக்கமுடியாத நான்கு இரத்தினங்கள் பதித்த பத்து பொற்காசுகள் கொண்ட மாலை ஒன்றை நன்கொடையாகப் பெற்றதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள். இம்மாலையைப் படித்து, அதன்படி அமல்களும் செய்து பெரும்பதவியையும் எட்டியதோடு மற்றவர்களுக்கும் படித் துப்பயன் பெற உதவினார்கள்.

இமாமுல் அரூஸ் (ரஹ்) அவர்கள், இறுதிவரை தங்களின் சேவைகளை மார்க்கத்தின் முன்னேற்றங்களிலும், வணக்கங்களி லும், அனுஷ்டானங்களிலும், தாங்களும் நடந்து மக்களையும் அதில் பயன் பெறச் செய்வதில் தங்கள் வாழ்நாட்களை செலவு செய்து அதில் முழு வெற்றியும் கண்டு, இஸ்லாமிய அறநெறிகள் அனுவத் துணையும் பிறழாது வாழ்ந்து பல அற்புத செயல்களையும் நடத்திக் காட்டிய ஒரு வலியுல்லாஹ்வாக திகழ்ந்து ஹிஜ்ரி 1316 றஜபு பிறை 5 ல் இறைவனடி சேர்ந்தார்கள். (ஆண்டவன் அவர்களை பொருந்திக் கொள்வானாக!)

அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்களின் பரிசுத்த வாழ்க்கையும், திவ்விய சேவைகளும், இன்று வரை பல்லாயிரக்கணக்கான மக்களின் மனதை கவர்ந்து கொண்டிருக்கின்றன.

பெருமானார் (ஸல்) அவர்களின் திருப்புதல்வியர் மீதிலுள்ள ''தலைஃபாதிஹா'' இசைக்கப்படும் காலமெல்லாம் ''ஜலாலிய்யா ருதிபு'' வின் ஓசை ஒலித்துக்கொண்டிருக்கும் காலமெல்லாம், இந்த ''ஹத்யா மாலை'' மக்களுக்கிடையிலே ஒளிவிடும் காலமெல்லாம் அஷ்ஷெய்குல் காமில், மலிக்குஷ்ஷுஅரா, மாதிஹுஸ்ஸபிய்யைன் அல்ஹாஜுல் ஹறமைன், இமாமுல் அரூஸ், மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்களின் திருநாமமும் மக்கள் நெஞ்சங்களில் நிலைப்பெற்று இருக்கும்.

அல்லாஹுதஆலா இமாமுல் அரூஸ் (ரஹ்) அவர்களின் பொருட்டால் நம் அனைவரையும், அவனின் ஏகத்துவத்தின் பால் நிலையாக்கி வைத்து, இதில் கூறியுள்ளபடி பத்துப் பேர்களுக்குரிய நாற்பது ஹத்யாக்களையும் சேகரிக்கத்தக்க அறிவையும், ஆற்றலையும் நமக்குத் தந்து, மறுமையில் நல்லவர்களின் கூட்டத்திலாக்கி வைத்து, சுவனத்தில் உயர்வான மாளிகைகளில் வாழும் பாக்கியத்தையும் தந்து, செழுமையான முகங்களுடன். இறைவனைச் சந்திக்கும் பெரும் பேற்றையும் அருள்வானாக! ஆமீன்!

---



## ஹத்யா மாலை

1 எல்லா வஸ்திலும் பாதினாகி
ஏகமா யெங்கும் ளாஹிராகும்
அல்லாமுல் குயூப் அவனுக்காகும்
அனேக புகழ்ச்சியும் வகை தனுவும்
சொல்லால் சலவாத்தும் சொல்ஸலாமும்
துய்ய ரஸூலுல்லாஹ் மீதிலாகும்
நல்லார் ஆல்மீதும ஸஹ்பு மீதும்
நாடோறும் சொரி வாய் இலாஹீ.

எல்லாவற்றுக்கும் கருவாயிருப்பவனும், எங்கும் வெளியாகி நிற்பவனும், மறைவான அனைத்தையும் அறிந்துக் கொண்டிருப்பவனுமாகிய வல்ல இறைவனுக்கே அனைத்துப் புகழும் துதியும் உரித்தாகும். கருணையும், சாந்தியும் அவனின் தூதர் மீதிலும், கிளையோர் தோழர் மீதும் வல்ல நாயன் நாள்தோறும் சொரிவானாகை.

2 மவ்தாகு முன்னே மவ்த்தாகவும்
மாகை முழுக்கு முன் முழுகெனவும்
ஸவ்த்தால் உயர்ந்தோர் சொல் சாரமதை
சகலரும் விளங்கார் அறியார்
மவ்த்து ஹகீகிய்யும் இருதிய்யுமாம்
மவ்த்து உடலுக்கு றூஹுக்கில்லை
மவ்த்தையறி யாதார் மடையரென்று
மணலில் கதம்தோயா நபிமொழிந்தார்.

இறப்புக்கு முன் இறத்தல், குளிப்புக்கு முன் குளித்தல் என்ற உயர்ந்தோரின் உயர்வான தத்துவத்தை, அனைவராலும் உணர்ந்து அறிந்துக் கொள்ள முடியாது. இயற்கையான இறப்பு, பாவனையான இறப்பு என்று இருவகையான இறப்புக்கள் உள்ளன. இன்னும், இறப்பு உடலுக்கு இன்றி ஆன்மாவுக்கு இல்லை. (ஆகவே), இத்தகைய இறப்புகளைப் பற்றி அறியாதவர்களெல்லாம், மடையர்கள் என்று மணலில் பாதம் பதியாத மாணல் நபிகள் (ஸல்) கூறியுள்ளார்கள்.

3 முன்னாள் லுக்மான் தன் மக்களிலே
முவ்வருக்கும் செய்வஸிய்யத்தது
மன்னான் தன்னையும் மவ்த்தினையும்
மறக்காதிருங்க ளென்றார் அதிலே
அந்நாளிந்நாளெந் நாளும்சொல்லும்
அறிவு சகலதும் புகுந்திட்டதால்
உன்னாவி விடும் மவ்த்ததனை
உன்தன் கண்ணின்முன் நிறுத்திக்கொள்வாய்

முன்னாளின் மருத்துவ மேதையாய் விளங்கிய ''லுக்மானுல்ஹகீம்'' என்பவர், தமது அருமை மக்களில் மூவருக்கும், தமது மரணத்தருவாயிலே மொழிந்த நன் மொழிகளில், இறைவனையும், இறப்பையும், என்றும் மறவாதீர் எனவும் அனைத்து அறிவுகளும் அதில் அடங்கியுள்ள காரணத்தால், ஆவி அகலுகின்ற இறப்பை எப்பொழுதும் உங்கள் இரு விழிகள் முன்னும் நிறுத்திக் கொள்வீர் என்று கூறியுள்ளார்.

4 மவ்த்தை படையாவிட்டா லெவரும்
மவ்லானை நாய னென்றறியார்
மவ்த்தை ஹயாத்துக்கு ரண்டாயிரம்
வருடத்தின் முன்னே வகுத்ததனால்
மவ்த்தை தட்டவல்லப மெவர்க்கும்
மனாமிலுமில்லை என்றறிவாய்
மவ்த்து அஃப்லாதூன் ஜாமாஸ்துவை
மருட்டிப் பிடித்ததை உற்றுப்பாரே

'இறப்பு' என்ற ஒன்றை (இறைவன்) படைக்கா திருந்தால், இறைவனைப்பற்றி அறியமுடியாது. ஆயுளைப் படைப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே 'இறப்பை' படைத்துவிட்டான். ஆதலால், இந்த இறப்பை விட்டும் தவிர்ந்துக் கொள்ள எவருக்கும் கனவிலுங்கூட வல்லமை இல்லை. (மேலும்) ஆராய்ச்சி வல்லுனரான அஃப்லாதூன், ஜாமாஸ்து எனும் இருவரையும் 'இறப்பு' இறுகப்பற்றியதையும், நீ உற்றுணர்ந்து பார்ப்பாயாக.



(குறிப்பு: அஃப்லாதூன் (பிளாட்டோ) என்பவர் முற்காலத்தில் வாழ்ந்திருந்த நல்ல வானசாஸ்திரியாகவும், பல கலைகளில் நிபுணராகவும், தமது ஆராய்ச்சியின் மூலம் ஆன்மாவின் அந்தரங்கத்தையும்கூட அறிந்துக்கொள்ளும் அளவிற்கு பெரும் அறிஞர் எனச் சொல்லப்படுகிறது. தமது ஆராய்ச்சியின் மூலம் தமக்கு மரணம் ஏற்படும் நேரத்தைக் கூட தெரிந்திருந்த இவர், அதனைத் தடுப்பதற்கு பல யுத்திகளையும் செய்து கொண்டார். ஆனால் அதில் மட்டும் அவருடைய முயற்சிகள் எதுவுமே பலிக்காமல் மரணத்தில் சிக்கிக் கொண்டார். இவரைப் போன்றே ஜாமாஸ்த் (ஜாலிநூஸ்) என்ற பூர்வகால வைத்தியர் ஒருவரின் கதையும் உண்டு. (இமாம் மாப்பிள்ளை ஆலிம் அவர்கள் இதனையே இதில் குறிப்பிடுகிறார்கள்.)

5 மரணத்தில் ஷக்கு வைத்தியானால்
வல்லவ உறக்கம் எவ்விதம் வந்தது
இரண மெவ்விதம் பசியும் தாகம்
இல்லாமலாக்குது என்றுப்பாரு
உறங்கி முடிந்தபின் விழிப்பெவ்விதம்
உனக்கு வந்தது சொல்லுமப்பா
உரலில் அகப்பட்ட கரத்தையவன்
உலக்கையால் ஏதும் செய்திடுவான்.

(எனவே), இறப்புப்பற்றி ஐயப்பாடு இல்லை. அப்படி ஐயப்பாடு கொள்வதாயின் உறக்கம் எவ்வாறு உண்டாகிறது? அந்த உறக்கத்தின்போது, பசி, தாகம் போன்ற உணர்வுகள் எப்படி இல்லாமல் போகிறது? (இவைகளைப் பற்றி நீ) சிந்தித்துப்பார். உலக்கையின் அடியில் அகப்பட்டு கொண்ட கையின் நிலையில், மனிதர்களாகிய நாம், இறைவனின் ஆதிக்கத்தில் உள்ளோம். (ஆகவே) அவன் எதுவும் செய்திடப் போதுமானவன்.

6 ஷக்கானதில் மவ்த்தைப் போலொன்றில்லை
ஷக்கில்லாத்தது மதுபோலில்லை

இக்கானதிலது தீர்ச்சையாகும்
ஏழுவாரியை அமுதமாக்கி
உக்காவாகவே புகட்டு கிலும்
ஒழியாததன் கசப் பொருகாலுமாம்
பக்கா ஆலிமாம் யாஃபிஈ தான்
பகர்ந்தா ரிதுகளை இர்ஷாதிலே.

எப்போது வரும் என்ற ஐயப்பாட்டுக்குரியதும், ஆனால் எப்போதாவது வந்தே தீரும் என்ற ஐயப்பாட்டுக்கிடமில்லாதது மானது 'இறப்பு' ஒன்றுதான். இறப்பு, எதிர்நோக்கி வரும் ஆபத்தில் திட்டமானது. இறப்பு நம்மை எய்கின்ற நேரத்தில், ஏழு கடல்களின் நீரையும், அமுதமாக மாற்றிக் குடிக்கச் செய்த போதிலும், மாறாத கசப்பைத்தருவது என்று அறிஞர் பெருந்தகை யாஃபிஈ அவர்கள் தமது 'இர்ஷாத்' என்ற தத்துவ நூலில் விவரித்துள்ளார்கள்.

7 நிலையில்லா துன்யா தன்னை விட்டு
நீங்கும்போது நாற்பது ஹத்யா
பிலனைக் கொடு போவ தெவர் மீதினும்
பெரிய ஃபர்ழாகும் ஏதுக்கானல்
நலத்தைப் பயிர் செய்தோர் நலம் பெறுவார்
நஞ்சைப் பயிர் செய்தோர் நட்டமாவார்
உலகத்தா ரெல்லாம் அறிய வேண்டி
உரைத்தேன் ஹத்யாவை அறிந்துக்கொள்வாய்

இவ்வுலகில் நன்மையை விதைப்பவர்கள் அங்கே மறுமையில் நலம் பல பெறுவார்கள். நச்சுப்போன்ற தீமையை விதைப்பவர்களோ, அங்கே மகத்தான இழப்பையே பெறுவார்கள். இந்த அடிப்படையில், நிலையில்லாத இந்த உலகத்தை விட்டு நீங்குகின்றபோது நாற்பது ஹத்யா (நன்கொடை) களை கொண்டுபோவது யாவர்மீதும் கடமை. இந்த ''ஹத்யாக்கள்'' யாவை? யார்யாருக்கு இவைகள் தரப்பட வேண்டும் என்பதை அடுத்து விளக்குகிறேன். அறிந்துக் கொள்வீராக!



8 பத்துபேரிலொவ் வொருவருக்கு
பங்கு நவ்வாலாய் கொடுப்பதறி
தத்துவமுள்ள இஸ்ருலுக்கும்
தரையாம் கப்றுமுன்கர் நகீருக்கும்
சற்றும் காஃபிர் மீதுருக்கம்வையா
சங்கைமாலிக் ரிழ்வானுக்கும்
ஹத்துஸைஃபான ஸிருத்மீஜான்
ஹாதிக்கும் ரூஹுமவ்லாவுக்குமாம்.

## ஹத்யாவுக்குரிய 10 பேர்கள்:

(1) இஸ்ருயீல் (அலை) (2) கப்று (3) முன்கர் வ நகீர் (அலை) (4) நிராகரித்தோர் மீது கொஞ்சமும் இரக்கம் காட்டாத சங்கைக்குரிய வானவர் மாலிக் (அலை) (5) ரிழ்வான் (அலை) (6) 'ஸிருத்' என்ற பாலம் (7) மீஜான் (தராசு) (8) நபிகள் கோமான் முஹம்மது (ஸல்) (9) 'ரூஹு' (ஆன்மா) (10) நேர்வழிக்காட்டுபவனான அல்லாஹ் (ஜல்). ஆக இந்த 10 பேர்களுக்கும், ஒவ்வொருவருக்கும் 4 ''ஹத்யாக்கள்'' விதம் நாற்பது ஹத்யாக்கள் என்பதை அறிந்துக் கொள்வீர்களாக!

9 மலக்கல் மௌத்தான இஸ்ருலுக்கு
மவுலக்கேளுமே ஹத்யா நான்கு
வழக்காளிதன்னை பொருத்தமாக்கல்
மௌத்துக்கா யத்தப் படுவதுவும்
விலக்க முடியாத மௌத்ததனை
விரும்புவதுமூன்றும் நான்காவது
பிலக்கேடால்தப்பிப் போன அமல்
பேணிகழா செய்வ திதுநான்குமாம.

## இஸ்ருயில் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்கள்: 4

(1) வழக்காளிகளைச் சமாதானப்படுத்துவது. (2) மரணத்திற்கு ஆயத்தமாக இருப்பது. (3) தவறவிட்ட வணக்கங்களை 'கழா' செய்வது (4) மரணத்தை விரும்புகிறது. இந்நான்கு அமல்களும் ''மலக்கல்மௌத்'' எனும் இஸ்ருயீல் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்களாகும்.

10 இருள்ளறையான கப்றுக்கு நால்
இயம்பக்கேளுமே ஒன்ருவது
சிறுநீர் மலம் நஜீஸினைப் பேணலும்
சிறியமவ்த்தினை குறைப்பதுவும்
குர்ஆனை உவந்தோதுதலும்
கூறும் ஹத்யாவில் மூன்ருவதாய்
சர்வரும்படுத் துறங்குநேரம்
சாளயப்பாடாய் தொழுவதுமே.

**கப்றுக்கான ஹத்யாக்கள்: 4.**

(1) சிறு நீர், மலம் போன்ற அசுத்தங்களை விட்டும் துப்பரவாகுதல். (2) உறக்கம் எனும் தூக்கத்தை குறைப்பது (3) குர்ஆன் ஷரீஃபை பேணுதலாக ஓதி வருதல். (4) இரவில் நடுநிசியில் பக்தியோடு இறைவனை வணங்குதல் (தஹஜ்ஜத் தொழுவது). இந்நான்கு அமல்களும் கப்று எனும் புதைக்குழிக்கான ஹதியாக்களாகும்.

11 நாவிலுண்மையும் நாவலரை
பத்னும் ஈபத்து உரையாதலும்
தாவி விழும் ராஜன் சமுகத்திலே
சரியான பேச்சைப் பேசுதலும்
ஆவி விடும்நாளெத்தும் வரை
ஆர்க்கும்தாழ்மையாய் நடப்பதுவும்
பாவியைக்கடிந்துருக்கு மெங்கள்
பாத்திபர்முன்கர் நகீருக்கென்ருர்.

**முன்கர் நகிர் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்கள்: 4**

(1) நாவினுல் என்றும் உண்மை பேசுதல். (2) நல்லவர், கற்றவர்களை பெயர் கெடுக்கக்கூடிய விதமான பேச்சுகளை பேசாதிருத்தல் (புறங்கூருதிருப்பது). (3) சத்தியம் தவருதிருப்பது. (3) எல்லாருக்கும் பணிந்து (மரியாதையோடு) பேசுவது. இந்த நான்கு அமல்களும், கப்றில் கேள்வி கேட்கும் "முன்கர்வ நகீர்" என்ற இருவர்களுக்கான ஹத்யாக்களாகும்.



12 அல்லாஹ்வை பயந் தழுவதுவும்
அன்னை தந்தையர்க் குபகாரமும்
பொல்லாப் பாவத்தை விடுவதுவும்
புகழும் ரகசியக் கொடையுமாகும்
சொல்லாலிது நான்கும் மாலிக்குக்கு
தொகுத்தஹத்யா வாகுமெனவே
பொல்லா உத்பாவை பொருதுமெங்கள்
புண்ய ஹபீபுல்லாஹ் புகலலுற்ருர்.

**மாலிக் (அலை) அவர்களுக்கான ஹதியாக்கள்: 4**

(1) இறைவனைப் பயந்து கண்ணீர் உகுத்தல் (2) பெற்றேரைப் பேணி அவர்களுக்கு பணிவிடை செய்தல் (3) பெரும்பாவம், சிறுபாவங்கள் செய்யாதிருத்தல் (4) இரகசியமாக கொடை கொடுத்தல். இத்நான்கு அமல்களும் நரகத்தின் பொறுப்பாளியான மாலிக் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்களாகுமென 'உத்பா' வெனும் கொடியவனை வென்ற எம்பெருமானுர் (ஸல்) அவர்கள் பகர்ந்தார்கள்.

13 ஹத்யா நான்குதான் வேணுமென்ருர்
கனதி சொர்க்கத்தின் ரிழ்வானுக்கு
விதியாம் அமானத்தைப் பேணுதலும்
வில்லங்கம்களில் ஸப்று செய்தலும்
புதியதுக்கொவ்வா வண்ணமான
புண்ணியன் வழிப்பாடதிலும்
மதியை அழைப்பித்தோர் வழிப்பாட்டிலும்
மாஸ்களைச் செலவளிப்பதுமே.

**ரிழ்வான் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்கள்: 4**

(1) 'அமானத்' எனும் நம்பிக்கையான வைகளை பேணிக்காப்பது. (நம்பிக்கைக்கு மோசம் செய்யாது செலுத்தல்). (2) இன்னல்கள் எவ்வளவு ஏற்பட்டாலும், அப்பொழுது பொறுமையைக் கடைப்பிடித்தல், (3) இறைவனின்

(கட்டளைகளுக்கு) வழிப்பட்டு நடப்பது. (4) சந்திரனை (அற்புதமாக) அழைத்து மெய்பித்த நபி பெருமான் (ஸல்) அவர்களின் வழியில், சன்மார்க்கத்திற்காக தங்களின் பொருள்களைச் செலவு செய்தல். இந்நான்கு அமல்களும் பெருமைக்குரிய சுவர்க்கத்தின் பொறுப்பாளியான ரிழ்வான் (அலை) அவர்களுக்கான ஹத்யாக்களாகும்.

14 முஃமினுனைப் பேர்க் குதவிப்பாடும்
முனியும் கோபத்தை அடக்குதலும்
நேமிக்கப்பட்ட ஜுமுஅத்துக்கு
நேக்கு ஜமாஅத்துக் கேகுதலும்
ஆமில்முப்பதாயிரம் வருடத்
தரிபாடுளபாலம் சிருத்துக்கென்றே
ஹாமீம் முஹம்மது கவலலுற்ருர்
ஹத்யா இதுகள்தாம் வாஜிபென்றே

## 'ஸிருத்' பாலத்திற்கான ஹத்யாக்கள்: 4

(1) விசுவாசிகளான பேர்களுக்கு உ த வி பு ரி த ல். (2) கோபத்தை அடக்குதல் (3) கடமையாக்கப் பட்டுள்ள 'ஜுமுஆ' தொழுகைக்கு தவருது செல்லுதல் (4) ஐங்காலத் தொழுகைகளை ஜமாஅத்தோடு நிறைவேற்றுதல். இந்நான்கு அமல்களும், முப்பதுனுயிரம் வருடத்தொலை தூரமும், வாளினும் கூர்மையானதெனக் கூறப்படுகின்ற 'ஸிருத்' எனும் நல்வழிப்பாதைக்கு கட்டாயமான ஹத்யாக்கள் என்று ஹாமீம் முஹம்மது (ஸல்) அவர்கள் வலியுறுத்தியுள்ளார்கள்.

15 எல்லா அமலுக்கும் ரூஹாகிய
இக்லாஸெனும் கலப்பறுதலொன்று
அல்லாஹ்வை எந்தஹாலி லேயும்
அதிகமாய் திக்ரு செய்வதொன்று
நல்லார் பொல்லாரெல்லாருடனும்
நற்குணமாக நடப்பதொன்று
சொல்லால் செயலால் நோவினைவிடுதல்
தூக்கும் தராசுக்கு ஹத்யாவென்ருர்.



## 'மீஜான்' தராசுக்கான ஹத்யாக்கள்: 4

(1) செய்யும் 'அமல்கள்' எல்லாவற்றிர்க்கும் உயிர் நாடியாக இருக்கும் 'இக்லாஸ்' எனப்படும் கலப்பற்ற மனது வைப்பது. (2) எந்த நிலையிலும் அல்லாஹ்வை அதிகமாக நினைத்து 'திக்ரு' (தியானம்) செய்தல். (3) நல்லவர், கெட்டவர் எல்லோருடனும் நல்ல குணமாக நடப்பது. (4) சொல்லாலும் செயலாலும் பிறரை நோவினைப்பட வைக்காதிருப்பது. இந்நான்கு அமல்களும், (மறுமையில்) நன்மை தீமைகளை சீர்தூக்கிப் பார்க்கக்கூடிய 'மீஜான்' எனும் தராசுக்கான ஹத்யாக்களாகும்.

16 தாஹாரஸூலுக்கு கொண்டு போகும்
சங்கை ஹத்யாதான் நாலாகுமாம்
தாகமாயவர் மீதும் அவர்
சங்கை குடும்பத்தா ரடங்கல் மீதும்
ஏகமாய் ஹுப்பை பெருப்பிப்பதும்
இவர்களை தீனில் துயருதலும்
ஆகமத்தோதும் அஸ்ஹாபியை
ஆரையும் நோவிய்யாதது மே.

## நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கான ஹத்யாக்கள்: 4

(1) நாயகம் (ஸல்) அவர்களை எப்பொழுதும் நேசித்துக் கொண்டிருப்பது. (2) அவர்களின் குடும்பத்தார் அனைவரையும் நேசிப்பது. (3) மார்க்கத்தில் அன்னவர்கள் நடந்துக் காட்டிய வழிகளை பின்பற்றுதல் (4) ஆகமங்களெனும் இறைமறையோதி அதன்படி நடந்த நபித்தோழர்களை இகழாதிருத்தல். இந்நான்கும் நமது தாஹா ரஸூல் (ஸல்) அவர்களுக்கான ஹத்யாக்களாகும்.

17 ரூஹுதனக்குதான் ஹத்யா நான்கு
ருசிக்கும் நித்திரை குறைப்பதுவும்
சாகுமளவும் அல்லாஹ்வுக்காக
சகல நேரமும் திக்ரு செய்யலும்

ஆகுமாம் பேச்சை குறைப்பதுவும்
ஆனக் குடிப்புத்தீன் குறைப்பதுவும்
ஆக இது நான்கும் வேணுமென
அரவமுறைகேட்கும் ஆண்டோர் சொன்னர்.

**'ரூஹு' ஆன்மாவுக்கான ஹத்யாக்கள்: 4**

(1) நினைவோடு நித்திரை செய்தல் (2) இறுதி வரை எந்நேரமும் இறைவனை தியானித்தல் (3) பேச்சுகளைக் குறைத்து நாவைப் பேணுதல் (4) ஊண், குடிப்புகளைக் குறைத்தல். இந்நான்கும் ரூஹு எனும் ஆன்மாவுக்கான ஹத்யாக்கள் என்று பாம்பின் முறையீட்டைக் கேட்ட எமது நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் சொன்னர்கள்.

18 ஹைய்யுன் கைய்யூமாம் ஹக்குக்காக
ஹத்யா நாலுதான் வேணுமென்ருர்.
செய்யும் நன்மைக்கொண்டேவுறதும்
தீங்கைவிட்டுமே விலக்குறதும்
ஐயமறயார்க்கும் உபதேசமும்
ஆர்க்கும்தாழ்மையாய் நடப்பதுவும்
வையகத்தார்களறிய வேண்டி
வழுத்தினேன் ஹத்யா நாற்பதே.

**அல்லாஹ் (ஜல்) வுக்கான ஹத்யாக்கள்: 4**

(1) பிறரை நலவைக்கொண்டு ஏவுதல் (2) பிறரை தீங்கிலிருந்து விலக்குதல் (3) யாருக்கும் சந்தேகங்கள் நீங்குமளவுக்கு (தெளிவாக) உபதேசித்தல். (4) எல்லாரையும் மதித்து பணிவுடன் நடப்பது. இந்நான்கும் நித்திய ஜீவனும், நிலையானவனுமான அல்லாஹ்வுக்கான ஹத்யாக்களாகும். (ஆகவே) இந்த நாற்பது ஹத்யாக்களையும் உலக மக்கள் அறிந்துக்கொள்ள வேண்டி விளக்கினேன்.



19 இந்தப் பத்துபேர் ஹத்யாக்களில்
ஏது குறைந்தாலு மவரவர்கள்
அந்தப் பாவியை வழக் கெடுத்து
ஆக்கினை செய்ய ஆரம்பிப்பார்
எந்தமட்டிலும் இயன்ற மட்டும்
ஏதுஹத்யாவும் குறைந்திடாமல்
சொந்தமாம் ஜவா தாவானதில்
சோரவிடாமலே விழித்துக்கொள்வாய்

(மேலே கூறப்பட்ட) இந்த பத்துபேர்களுக்கான ''ஹத்யாக்கள்'' எது குறைந்தாலும், அவரவர்கள் (உலகத்தில் இவைகளை அறிந்து பேணி நடக்காத) பாவிகளை அல்லாஹுதஆலாவின் சந்நிதானத்திலே வழக்காடி தண்டனைகளைத் தந்திட தயங்கமாட்டார்கள். ஆகவே, முனைந்து முயன்று சோர்வு அடையாமல், விழிப்புடன் இருந்து, தங்களது தற்காப்புச் சாதனமாகிய இந்த ஹத்யாக்களை ஒன்றும் விடாமல் வாழ்நாள்களில் கடைப்பிடித்துக் கொள்ளுங்கள்.

20 காதவழி ஸஃபர் போகிலும் நீர்
கையிலாயுதம் கட்டுச்சாதம்
பாதக்குறடொன்றும் பையில் காசும்
பயங்கரத்தினுல் தோழனென்றும்
ஈதெல்லாம் தேடி ஏகிற நீர்
எப்போதும் மீளா பெருவழிக்கு
ஏதைதேடு வீரோ துணையாய்
எனக்குத் தெரியாதப்பா மகனே

நெடுந்தூரப் பயணத்தை மேற்கொள்ளும்போது, போதிய பணம், தேவையான உணவுப் பொருள்கள், துணைக்கு ஒரு பணியாளன், தற்காப்புக்காகச் சாதனங்கள் முதலானவைகளைக்கொண்டு போக விரும்புகின்ற நீங்கள், எப்பவும் மீளமுடியாத மறுமைபதிக்கு பயணத்தை மேற்கொள்வதற்காக எத்தகைய சாதனங்களை சேகரிப்பீர்களோ எனக்குத்தெரியாது (ஆகவே, சிந்தித்து சீர்படுவீர்களாக!)

21 கானலைத் தண்ணீரெனக் கருதி
கண்ட பலன் ஏது தாகமல்லால்
மானார்கலவியில் பொருளாசையில்
மயங்கிதயங்கியே போதமற்று
வீணாயுளறியே வாணாளெல்லாம்
வெத்தி யிழவுக்காய் தேடித்தேடி
போனார்கள் கோடிக் கோடிக்கோடி
போனயிடமெங்கே தடங்களெங்கே

தாகத்தைத் தீர்க்கமுடியாத கானல் நீர் போன்ற இந்த உலகத்தை நம்பி, பொன்னாசை. பெண்ணாசை. பொருளாசை இவைகளில் மூழ்கி, மயங்கி, வாழ்க்கைகளை வீணடித்து மாண்டு போன கோடானகோடி பேர்களின் நிலைமைகள் என்ன? அவர்களெல்லாம் எங்கே போயினர்? அந்தத் தடயங்களெல்லாம் எங்கே? (இவைகளையெல்லாம் சிந்திக்க வேண்டாமா!)

22 அவர்கள் நாயிபாய் போனதுபோல்
அவர்கள் மக்களும் போவதுண்மை
சுவரில்லாச் சித்திரம் நிற்குமா
சொல்லில்லாமலே பொருள் நிற்குமா
எவரும் பொருளதை விரும்பினாக்கால்
எந்தப் பொருளும் கைக் கூடாதென்றே
தவறிப்போகுமுன் தௌபாவினை
தங்கரீகமாய் எடுத்துக் கொள்வீர்

சுவரில்லாத சித்திரமாக, சொல்லில்லாத பொருளாக உள்ள இந்த நிலையில்லாத உலகை விட்டு அவர்களின் முன்னோர்கள் மாண்டு மறைந்துபோனது மறுக்க முடியாத உண்மை. அவ்விதம் மறைந்துபோனபின் (மறுமையில்) இவ்வுலகப்பொருள்கள் ஒன்றுமே பயன்படப்போவதில்லை. எனவே, இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி, இவ்வுலக ஆசைகளை நீக்கி, மறுமைக்குவேண்டிய நற்செயல்கள் எனும் அழியாப் பொருளை ஆயத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.



23 கப்பலேறினும் காடேகினும்
கவிழ்ந்த சிரம் நிமிர்த்தாதிடினும்
அப்போவிதித்த தற்கதிகமாயோர்
அணுவும் கிட்டாதென் றறிந்திருந்தும்
அற்ப துன்யாவின் மாய்கையினால்
அல்மலக்கவே சாடிச்சாடி
றப்பை மறந்திடும் கைசேதத்தால்
ரத்தமாயழப் பூண்டு கொண்டாய்

கப்பலேறிக் கடல் கடந்து பல பல நாடு காடுகள் சென்று முழுமூச்சுடன் உழைத்துப் பாடுபட்டபோதிலும், இறைவன் அன்று விதித்திட்ட அளவேயன்றி சிறிதேனும் அதிகமாகக் கிடைக்கப் போவதில்லை என்பதை உணர்ந்திருந்தாலும்கூட, அற்பமான இந்த உலகமாயையின் கவர்ச்சியிலே மயங்கிவிட்ட கைசேதத்தினால் இரத்தக்கண்ணீர் வடிக்க நேரிடும். (என்பதை உணர்வாயாக)

24 நஞ்சாம் அவாவான தொடுக்கத்திலே
நஹ்ஸு நாறினில் நூறானது
பிஞ்சிலெழுந்தது அனேகத்தழுமை
பின்னால் வருவது திண்ணமாச்சு
அஞ்சாறுடன்தக்வா ஜுஹ்றதை
அருமை தௌஹீதாம் மஃரிபத்தை
நெஞ்சாலுறுதியும் நமஸ்காரமும்
நேமம் நிஷ்டையால் தவசிருப்பாய்

(இவ்வுலகப் பொருள்கள்மீது வைக்கின்ற) நச்சுத்தன்மையுடைய பேராசை, இறுதியில் உனக்கு இழிவையும், தாழ்வையும் எரிகின்ற நரகத்தையும் நிச்சயம் பெற்றுத் தரும். (எனவே இவைகளிலிருந்து நீ ஈடேற்றம் பெற விரும்பினால்) 'இஸ்லாம்' ஐந்து ''ஈமான்'' ஆறு என்பவைகளை இதயத்தில் உணர்ந்து, இறையச்சம் கொண்டவனாக, ஏகத்துவமெனும் மெஞ்ஞான நிலைகளைத் தெரிந்து, காலம் தவறாத வணக்கங்களால், துதிகளால், மற்றும் பிற நற்செயல்களால் உன்னை நீ சுத்தப்படுத்திக் கொள்வாயாக!

25 சுருங்கும் இக்பாலின் சொல்புரட்டி
சொல்ல லாபகா வானதுபோல்
திர்ஹம் தீனாரின் ஒடுக்கமது
தீங்காய் நம்நாரா முனதுசிந்தை
மருளும் தஹபுக்கும் பிள்ளத்துக்கும்
மாலுக்கும் மஃனைவைப்பாரு
பொருளைவெறுப்பாயிப் பொருளைக்கொண்டு
போதும் உபதேசம் உனக்கிதுவே

நீ அள்ளி ஆள நினைக்கின்ற பொன், வெள்ளி நாணயங்களினால் ஏற்படுகின்ற விளைவு, துயரமாகும். பேராசைத் தீயினால் உந்தப்பட்ட உனது சிந்தை விரும்புகின்ற (தஹபு-தங்கம்) (பிள்ளத்-வெள்ளி) (தீனார்-தங்க நாணயம்) (திர்ஹம்-வெள்ளி நாணயம்) (மால்-சொத்து) இந்தப் பெயர்களிலே அமைந்துள்ள நிலையற்ற பொருளை நீ உற்றுணர்ந்து, அழியும்-அழிக்கும் அந்தப் பொருட்களையே முன்னேக்கல் எனும் பேராசையை விட்டொழிப்பாயாக. *(அப்படி நீ உணர்ந்தால்)* இந்த நல்லுரை உனக்குப் போதுமானது.

*(குறிப்பு:* அரபியில் ஐந்து எழுத்துக்கள் கொண்ட 'இக்பால்' என்ற பதத்துக்கு முன்னேக்குதல் என்று பொருள். இந்த பதத்தின் அரபி எழுத்துக்களை புரட்டிப் படித்தால் ''லாபகா'' என்றாகும். அதன் பொருள் நிலையற்றது என்பதாகும்)

26 போதும் பொருளென சொன்னவரார்
போகாதிருந்தவ ரெவர்சொல்லப்பா
ஏது கணக்கிலும் எத்தா முதல்
ஈந்தான் இறையவன் காறூனுக்கு
வாதுரை ஹாமான் ஃபிர்அவ்னுக்கு
வருத்தவாழ்வு கொண்டவர்க ளொரு
போதும் போதுமென் றுரைக்கவில்லை
போனவர் யாரும் மீண்டதில்லை



இந்த வையகத்திலுள்ள பொருட்களை, போதும் என்று சொன்னவர்கள் யாருமில்லை. (மரண மெனும் வாகனத்தில் ஏறி) போகாமல் இருந்தவர்கள் யாருமில்லை. (உதாரணமாக) அளவிட முடியாத பெரும் செல்வங்களை - சொத்துக்களை இறைவன் காறூன் ஹாமான், . பிர்அவ்ன் போன்றவர்களுக்கு கொடுத்தான். இவர்கள் கூட ஒருபொழுதும் போதும் என்று சொன்னதில்லை. இவைகளையெல்லாம் பிரிந்துப் போனவர்கள் மீண்டதுமில்லை.

27 மண்ணாலமைந்தவன் பசியும் தாகம்
மண்ணைக் கொண்டல்லால் முடிவதில்லை
எண்ணதெண்ணங்கள் எண்ணி எண்ணி
இழந்தான் ஆவியெல்லாம் அபதாய்
கண்ணால் கண்டதெல்லாம் அபதாய்
கருத்தில் காட்டும் அக்காரணத்தை
நன்றாய் ஸூரத்துத் தத்ஃபீஃபுலே
நாயன் சொன்னதை ஓதிப்பாரு

மண்ணினால் படைக்கப்பட்ட மனிதனின் *(பேராசையால் எழுகின்ற)* பசி தாகம் எல்லாம் மண்ணைக் கொண்டுதான் அடங்கும், என்ற மகத்தான கருத்தை, பேராசைப் பேய் பிடித்து அலைந்துக் கொண்டு, எண்ணாத எண்ணங்களை எல்லாம் எண்ணி எண்ணி வீணாக ஆவி துறக்கின்ற நீ ''ஸூரத்து தத்ஃபீஃபு'' என்ற வான்மறை வசனத்தின் வாயிலாக வல்ல இறைவன் சொல்வதை ஓதிப் பார்ப்பாயாக.

''அளவில் மோசம் செய்பவர்களுக்கு கேடுதான். அவர்கள் மனிதர்களிடம் அளந்து வாங்கினால், நிறைய அளந்து கொள்கின்றனர். மற்றவர்களுக்கு அவர்கள் அளந்து கொடுத்தாலும், அல்லது நிறுத்துக் கொடுத்தாலும் குறைத்து (அவர்களை நட்டப்படுத்தி) விடுகின்றனர். மகத்தான ஒரு நாளில், நிச்சயமாக அவர்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவார்கள் என்பதை அவர்கள் நம்பவில்லையா? அந் நாளில் மனிதர்கள் யாவருமே உலகத்தாரின் இறைவன் முன் (விசாரணைக்காக) நின்று கொண்டிருப்பார்கள். எனினும், நிச்சயமாக பாவிகளின் ஜாபிதா ''ஸிஜ்ஜீனில்'' இருக்கிறது. (நபியே!) ஸிஜ்ஜீன் என்றால் என்னவென்று அறிவீரா? (அது ஒரு பதிவுப்)

புத்தகம், (தண்டிக்கப்பட வேண்டியவர்களின் பெயர்களெல்லாம் அதில்) பதியப்பட்டிருக்கும்''. (ஸூறத்து: தத்ஃபீஃப் 1-9)

28 அல்ஹாக்கு முத்தகாதுருலே
அல்லாஹ் உரைத்ததின் பயனையொத்து
அல்ஹாதிர்ரஸூல் ஹதீது தனில்
அன்னாஸுநியா மெனவும்சொன்னார்
சொல் ஆ! தோழனே ஏதுமாகை
தோணுதோ உந்தன் சிந்தைதனில்
பல்காப்பியம் எடுத்தோதிடினும்
பயனை காண்கிலேன் ஆ! புதுமை

''அல்ஹாக்கு முத்தகாதுரு'' என்மறை வசனத்தின் வாயிலாக, அல்லாஹ் சொன்னதின் அடிப்படையில் 'அன்னாஸு நியாம்''(மனிதர்கள் உறக்கத்திலிருப்பவர்கள்)என்று அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் மனிதர்களை குறிப்பிட்டுள்ளார்கள். (அதற்கொப்ப) தோழா! உனக்குப் பல்காப்பியங்களிலுள்ள வற்றை எடுத்து விளக்கினாலும், உந்தன் சிந்தையில் என்ன தோன்று கிறதோ! ஒரு பயனையும் காண்கிலேனே என்று வியப்பாக இருக் கிறது. (சிந்தித்து விழிப்படைவாயாக!)

''நீங்கள் கப்றுகளைச் சந்திக்கும்வரையில், (பொருளை) அதிகப் படுத்திக்கொள்ளும் பேராசை (அல்லாஹ்வை விட்டும்) உங்களை பராக்காக்கிவிட்டது. (அவைகள் என்ன, என்பதை) பின்னர் நீங்கள் நன்கறிந்துகொள்வீர்கள். அறிந்து கொள்ளுங்கள்! (அதன் பலனை) சந்தேகமற நீங்கள் அறிவீர்களாயின், நிச்சயமாக நரகத் தையே நீங்கள் (உங்கள் கண் முன்) காண்பீர்கள்! அதனை நீங்கள் (உங்கள் கண்ணால்) கண்டு கொள்வது உறுதி. பின்னர், (உங்களுக்கு இறைவன் புரிந்த) அருளை(நீங்கள் எவ்வழியில் செலவு செய்தீர்கள் என்பதைப்) பற்றியும், அந் நாளில் நிச்சயமாக நீங்கள் கேட்கப்படுவீர்கள்''. (ஸூரத்: 'காதுரு')

''மனிதர்கள் இவ்வுலகத்தில் இறுதிகால சம்பவங்களை மறந் தவர்களாக உறங்குகிறார்கள். மரணத்திற்குப் பின் அவைகளைத் தெரிந்துகொள்வதற்காக விழிப்பார்கள்''
(அல்ஹதீஸ்: நபிகள் நாயகம் [ஸல்]



29 இந்த உபதேசம் ஆர்ப்பு மட்டும்
ஈமானுள்ளோர்க்கு போதும் போதும்
எந்த கிதாபையும் குத்பாவையும்
எடுத்து ஓதினும் முனாஃபிகுக்கு
சிந்தையில் செல்லா திருப்பதினால்
தீர்த்தேன் இந்தமட்டில் வஃளை
சொந்தப்பை முதலாயிதனை
சொர்ணம் வாய்த்ததென் றறிந்துகொள்வாய்

ஈமான் இதயத்தில் உறுதிப்பாடுள்ளவர்களுக்கு இந்த மட்டில் நல்லுரைகள் போதுமானதென்றும், அப்படி ஈமானில் உறுதியில் லாத நயவஞ்சகர்களுக்கு, எந்த நூல்களிலிருந்தும் எடுத்து விளக்கிச் சொன்னாலும், அது சிந்தையை தொடாது என்று எண்ணியவனாக இந்தமட்டிலும், இந்த உபதேசங்களை நான் நிறைவுசெய்கிறேன். (எனவே) இந்த நல்லுரைகளை, செம்பொன் காசுகள் வாய்த்தது என்று (அவைகளை) உங்கள் சிந்தை எனும் பையில் நிரப்பிக்கொள் வீர்களாக!

30 வகுதை பிறந்து கீழக்கரையில்
வாசம் செய்தவ்வூ ரடங்குமெங்கள்
தகுதி ஷெய்குனா அப்துல்காதிர்
ஆலிம் சாஹிபின் காதிமானேன்
மிகுதி பாவத்தை விரும்பும் பாவி
மிஸ்கீன் செய்யிது முஹம்மதென்போன்
பகுதிபகுதியாய் பனுவல் செய்தான்
பலன்கொள் ஹத்யாமாலைதனையே

''வகுதை'' எனும் பெயர்பெற்ற காயல்பட்டணத்தில் பிறந்து கீழக்கரையில் வாழ்ந்து, அவ்விடத்திலேயே அடங்கியுள்ள கல்விக் கடல் அஷ்ஷெய்கு அப்துல் காதிர் ஆலிம் (கீழக்கரை தைக்கா) ஸாஹிபு வலியுல்லாஹ் அவர்களின் தொண்டனும், அதிக மதிகப்பாவங்களை விட்டும் இறைவனிடத்திலே பாதுகாவல் தேடுப

வனும், எளிமைத்தனத்தையே அதிகம் விரும்புகின்ற ஸெய்யிது முஹம்மது எனப் பெயருடையவனாகிய நான் (ஆண் பெண்) அடங்கலும் பயன் பெற வேண்டும் என்பதற்காக, இந்த ஹத்யா மாலையை கோர்வையாக்கினேன்.

31 எனக்கும் தாய் தந்தை இனத்தவர்க்கும்
என்னைக் கைதாங்கும் ஷெய்கவர்க்கும்
மணக்கண் திறக்க கை தந்தவர்க்கும்
மார்க்க வழி சறுகாதவர்க்கும்
கனக்க றஹ்மத்தும் மஃபிரத்தும்
காவல்பாட்டுடன் சிறப்பருள
சினக்கன் பார்வையும் எய்திடாமல்
செப்பமாய்க்காக்கும் யா றப்பனா

எங்கள் இறைவா! எனக்கும், என் தாய் தந்தையர்க்கும் என் இனத்தோர், என்னை கைதாங்கி ஈடேற்றம் பெற வைக்கும் என்னுடைய குருவானவர்களுக்கும், மற்றும் என்னுடைய கலை ஞானங்களை கற்க காரணமாக இருந்தவர்களுக்கும், மேலும், மார்க்க நெறிகளை தவறாமல் கடைப்பிடித்து ஒழுகிவரும் இஸ்லாமிய சமூதாயத்தவர் அனைவருக்கும், உன்னுடைய அருள்மாரியைப் பொழிந்து, எங்களை பாதுகாப்பாயாக! இன்னும் உன்னுடைய கோபப்பார்வையிலிருந்தும் எங்களை காப்பாற்றுவாயாக!

32 ஆயிரத்திரு நூற்றெண்பத்தா
றாண்டு றஜபு பத்தாம்திகதி
காயிலாக்கினேன் இந்த நூலை
ஹக்கை நாடினோ ரெல்லாருக்கும்
தாயிம் காயிமாம் நிற்குமொரு
தாத்தின் ஸிஃபாத்தை தோத்திரம்செய்தே
வாயிலும் கல்பிலுமவன்தன்
வல்லதிக்ரினை நடத்திவைப்பான்

இறைவனை நாடி, நற்கருமங்களை புரிபவர்களுக்காக, என்றும் நிலைத்திருக்கக்கூடிய வல்ல நாயனின் தத்துவார்த்தங்களையும், அவனின் வன்னிப்புகளையும், இருதயத்தில் கொண்டு, அவனைத் துதித்து இந்த (ஹத்யா மாலை எனும் நற்போதனைகள் அடங்கிய) நூலை, ஹிஜ்ரி 1286-ம் ஆண்டு ரஜபு 10-ம் நாள் அன்று சொல்லி முடித்தேன். எக்காலமும், வல்ல நாயன் எங்கள் நாவிலும், நெஞ்சிலும், அவன் தன வலுவான ''திக்ரை'' நடத்திவைப்பானாக!



33 நல்ல அழகான முத்திரையும்
நாவில் கலிமாவும் ஒடுக்கத்திலே
சொல்ல உதவியும் சோபனமும்
சொர்க்க வாழ்வுடன் லிகாவும் தந்து
அல்லலகற்றியே காத்தருள்வாய்
ஆண்டவா றப்பல் ஆலமீனா
ஸல்லி ஸல்லிமன் ரப்பி அலா
ஷாஃபிஉ வஆலிகீ இலாஹீ!

அகில உலகங்களையும் ஆளுகின்ற ஆண்டவா! எங்கள் நாவில் கலிமாவை மொழிந்தவர்களாக மரணிக்கச் செய்வாயாக! எங்கள் இதயத்திலே ஞான ஒளியை உண்டாக்கி அழகிய சின்னமாக முத்திரையிட்டருள்வாயாக! மரணத்திற்குப் பின் ஏற்படும் அல்லல்களை அகற்றி சுவர்க்க வாழ்வையும, உனது 'லிகா'வெனும் திருககாட்சியையும் தந்தருள்வாயாக!

இன்னும், நாயனே! உனது தூதரும், எங்களின் ஒப்பற்ற தலைவருமாகிய மாநபி (ஸல்) அவர்கள மீதும் அவர்களின் கிளையார் உற்றார், தோழர்கள் மீதும் மற்றும் தொடர்ந்தோர் அனைவர் மீதிலும் உன்னுடைய கருணையையும், சாந்தியையும் சொரிந்தருள்வாயாக!

ஆமீன்! யாறப்பல் ஆலமீன்!!



## இந்த "முனஜாத்" ஹழரத் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்கள் சொல்லியது

(இசை: முதலவன் தூதர் தாஹா...)

1 ஆதமாம் சஃபிய்யின் நாவில் ஆதியாய் ளாகிரான
வேதமாம் புகழ்ச்சி தன்னை விள்ளுவேன் நாச்சி ஹவ்வா
நாதமே சுமக்க வேண்டி நாடியே பகரம்கேட்க
ஓதுவாயென்ற சொல்லை ஓதினேன் யா இலாஹி

2 நம்மிறையோனின் ஹம்தில் நாலையும் ஒன்றாய்ச்சொல்லி
எம்மிரஸூலின் மீதும் ஏக ஆல் ஸஹ்பு மீதும்
ஹிம்மத்தால் சலவாத்தோதி ஹிதாயத்தை ஹாஸிலாக்க
இம்முனா ஜாத்தைசொல்வேன் இறையவா யா இலாஹி!

3 நாயனே உனது வாசல் நாடியே வந்து நின்றேன்
தூயனே எனது பாவம் துன்பமெல்லாம் தொலைத்தே
காயமும் கல்பும் உன்னை கருதவே கருணை செய்வாய்
தாயிலுமதிகமான தயாளனே யா இலாஹி!

4 நானெனும் வேறெனும்பல் நஜீஸினில் துவளலுற்றேன்
கானலைப் பானியா கண்டேனே காலமெல்லாம்
ஏனெனக்கேட்பாரில்லை எடுத்தெனை துடைப்பாரில்லை
தானவா உன்னையல்லால் தஹ்ஹிரன் கல்பீ இலாஹி!

5 ஆலமில் காண்பதெல்லாம் அதம் எனக்காண வேண்டி
மூலமாம் மந்திரத்தை முறைமுறையாகத் தந்தாய்
சீலமென் கெடுதலாலே ஜெயம்பெற வகையைக் காணேன்
கோலமொன்றில்லா கோனே குணமருள் புரி இலாஹி!

6 தொல்லையாம் நஃப்ஸு துன்யா தோஷி ஷெய்த்தான் வராவின்
சொல்லையே கேட்டு நாளும் தொலைக்கிறேன் உம்ரை யெல்லாம்
எல்லையை எத்த முன்பாய் என்னுயிரி முந்திடாமல்
ஸுல்லமல் இர்ஃபானேக ஷுஹூதினில் சேர் இலாஹி!



7 அந்திர ரஹ்மானிய்யத் ததுகொடு அர்ஷின் பேரில்
தந்திரமாக நாடும் தானவா ரஹ்மானே நீ
சுந்தரப்படைப்பையெல்லாம் தூய்துரப் படைத்துவைத்தாய்
மந்திரக் கலிமாயீந்த மாயவா யா இலாஹி!

8 மந்திரப் பொருளதனை வகையுடன் அறியநாடி
அந்தியும் சந்தியும்நான் ஆரிடம் சொல்வேனென்று
பந்தியில் தவித்த போது புதுமையாய் எங்கள் ஷெய்கு
வந்திருந்தறிவு தந்தார் வல்லவா யா இலாஹி!

9 காதிரீ வழியில் காமில் ஹழரத்து ஷெய்கு அப்துல்
காதிரின் சீசர்தன்னை ஹாதியா யுறுதிகொண்டேன்
ஃபாத்திரீ லுத்ஃபு கொண்டு பாரவான் ஷெய்குமாரின்
காத்திரமானச் சொல்லால் காட்சி தா யா இலாஹி!

10 ஹக்குடகுத்ரத்தென்னும் கையினுல்வாய்த்த பேராய்
ஷக்கில்லா இருதயத்தில் தாக்குவேன் வேறைகாணேன்
எக்குறையில்லா இல்மில் என்னை நீ வாஸிலாக்கி
இக்கணம் இறங்கவேணும் ஏகனே யா இலாஹி!

11 மூனுபத்தேழுகையும் முன்னவன் ரஹ்மத்தாலே
காணுவேன் கைகளெல்லாம் காதிரின் குத்ரத்தென்று
பூணுவேன் அவர்கள் பூட்டும் பொருளதைப்பிரியாவண்ணம்
தோணுமோர் 'ஷைஐ' எல்லாம் தோன்றிடாதருள் இலாஹி!

பாணி - தண்ணீர்
அதம் - இல்லாமை (அழியக்கூடியவை)
உம்ரு - வயது (வாழ்நாள்)
ஸுல்லம் - ஏணி
ஃபாத்திரீ - படைத்தவன்
லுத்ஃபு - உள்கிருபை
ஷைஐ - காட்சிப்பொருளை.

## இதுவும்
## அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள்
## இயற்றிய இசைப் பாடல் (பதம்)

யா முஹ்யித்தீன் ஜெய்லானி எனையாண்டருள்வீர்
மகராஜரே
ஆண்டருள்வீர் மகராஜரே - எங்கள்
அஹ்மது நபி திருப்பேரரே (யா முஹ்யித்தீன்)

உங்கள்தரீக்கினில் காதிரிய்யாதனில்
உறுதிக்கொண்டுங்களை புகழ்ந்திடவே - ஒரு
பங்கம்வராமலே எங்களைக் காத்தருள்
சிங்கமெனும் அப்துல்காதிரே
சிங்கமெனும் அப்துல்காதிரே - பசுந்
தங்கமெனும் அப்துல்காதிரே (யா முஹ்யித்தீன்)

வாசமல்லிகை முல்லை சூழ்பகுதாத பூ
ஸாலிஹா புத்திரரா யுதித்தீர்
நேசமுடனே மங்கை பாத்திமாயீன்றெடுத்த
தேசம் புகழும் அப்துல்காதிரே
தேசம் புகழும் அப்துல்காதிரே - விசு
வாசம் புகழும் அப்துல்காதிரே (யா முஹிய்யித்தீன்)

ஆசையுடன் புகழ் கீழக்கரைதுதி
அடியேன் ஸையித்முஹம்மதுக் கருள்வீர்
நேசம்தரும் ஜன்னதுல் ஃபிர்தவ்ஸெனும்பதி
சேர்த்திடும் யா அப்துல் காதிரே
சேர்த்திடும் யா அப்துல் காதிரே - சொர்க்கம்
சேர்த்திடும் யா அப்துல்காதிரே (யாமுஹிய்யித்தீன்)